

# இளையான்குடி

வேதாந்த மடம்

ஸ்ரீ சிவானந்த ஞானதேசிக சுவாமியவர்களால் பாடிய

## இளையான்குடி திருப்புகழ்.

# வாளவந்தம்மன் துதி



ஸ்ரீ சிவானந்த சுவாமிகள்
வேதாந்தமடம், இளையான்குடி.

உ

சிவமயம்

# இளையான்குடித் திருப்புகழ்

## காப்பு

தந்தனம் தந்தன தனதனன
தந்தனம் தந்தன தனதனன
மும்மதந் தங்கிடு கஜமுகனே
மும்மலம் மங்கிட வரமருளே
ஐம்முகன் தந்திடு கணபதியே
ஐம்புலன் நந்திட அருளருளே
செம்பத சிந்தனை தினமருளே
செம்மனின் றம்பியின் புகழருளே
பைம்பொழில் மன்னிடு மிளசையிலே
பைந்தமிழ் தந்திடு பெருமாளே



---

தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான
அனவாக னத்தர் அரிவான கத்தர்
அணுகாத முத்தி தருவோனே
அயிராவ தத்தர் அமராவ திக்கண்
அரசாள வைத்த திருவாளா

வனமார்கு றத்தி தினைமாவ ருத்த
வலமாய ணைத்த அதிமோகா
வயவீரர் நத்த ஜயசூரர் தத்த
வடிவேல்வி டுத்த அதிதீரா
மனமாயை யற்று மதிமோக மற்று
மலர்தாள்நி னைக்கு மறவோர்கள்
மனமெயி ருத்தி யிருதாளை வைத்துன்
மயமாய வைத்த குருநாதா
இனமான மற்ற வியல்ஞான முற்றுன்
இருதாளில் நிற்க அருள்வாயே
இளையான்கு டிக்கு ளுறைவோர்வ ழுத்த
எழிலோடி ருக்கும் பெருமாளே 2

---

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தனதான

அனத்தை வென்றவா அறநெறி முறையினர்
அகத்தெ ழுங்குறும் பறவெறி நெயிறினர்
அகக்க ணன்றிவே றறிவரும் பொறியினர் அடைவாக
அழுக்க கன்றவர் அடிமலர் புனைபவர்
அநித்த நித்தமும் அகமுற அறிபவர்
அகப்படும் பொருள் அனைத்தையு மொருவினர்
அறிவாலே

சினத்தை வென்றவர் செறியப ரறிவினர்
சிவக்கொ ழுந்துட னுறுபர வறிவினர்
செபத்து டன்புரி பரிசறி வறிவினர் பரசீவ

செகத்தி லொன்றிய செயலற வென்றவர்
பவத்தை வென்றறு பகையற நின்றவர்
செயித்து மும்மல திரிபறு முறுவினர் ஜெகஜாலர்

இனத்து யர்ந்தவர் இழிந்தவர் வறியவர்
இயற்று நன்குறு தவசிக ளவசிகள்
இளைத்து வந்தவர் கிளையவர் பழையவர் எவரேனும்

இலத்தில் வந்தவர் இரந்திடு பொருள்தரு
நலத்தில் நின்றவர் நலர்பல ருறைந்திடும்
இயற்கை தங்கிய இளைசையம் பதியினில்
உறைவோனே

வனத்தி னின்றிடு கிளிமொழி வளிமயில்
மயற்கொ டும்மர மறவர்த முருவுடன்
மதிக்க ரும்செயல் பலபுரி புனிதநன் மயிலோனே

வணக்கம் நற்பதி தொறும்புரி மதியிலி
மனத்தி னின்புகழ் மரித்தறி புலனிலி
மதித்துன் னிணையடி யெளியனுக் கினிதருள்
பெருமாளே

தான தந்தன தானு தானு தன
தான தந்தன தானு தானு தன
தான தந்தன தானு தனு தன தனதான

ஆதி யந்தமி லாதாய் நமோ நம
வேத வந்தமார் பாதா நமோ நம
ஆர ணம்புகழ் நாதா நமோ நம வெகுரூப
ஆக மந்துதி ரூபா நமோ நம
யோகர் சிந்தைய ரூபா நமோ நம
ஆற வந்தசொ ரூபா நமோநம தவராஜ
சோதி யிந்திரர் பாலா நமோ நம
தோகை வள்ளிதன் லீலா நமோநம
சூரை வென்றிடு வேலா நமோநம பரரூப
சோக மந்த்ரோப தேசா நமோநம
நாக குஞ்சரி நேசா நமோநம
சூரர் தங்குல நாசா நமோநம அருள்தாராய்
பாதி யம்புலி கூவிள மாநதி
நாக தும்பை யமர்வேணி சூடியோர்
பாக மம்பிகை யார்பெற வீந்தருள். பரமேசர்
பாவ னம்பெறு மேரக மீதினில்
சீவ னம்பெறு சீடர தாய்வரப்
பார் தலம்சொல வேயுப தேசித்த குருநாதா,
ஈத லம்புவி மீதே யுவந்திடும்
மாற னன்புறு கோலம தாய்வரு
மீச னன்புறு கோலா கலாதிரு முருகோனே.
ஈகை வந்தவர் வாழிளை யான்குடி
மீது வந்தவென் னுவா லுரைத்தவை
யீர மின்றிய தானுலு மேற்றருள் பெருமாளே 4

தானதா னனதன தனதான
தானதா னனதன தனதான

நாரமா ரலைகடல் துயில்மாயோன்
நாகமா ரமரர்கள் தொழும்வேலா
பாரமார் முனிவர்கள் உளம்வாழ்வோய்
பாதநான் பெறவருள் புரிவாயே
கோரமார் மயின்முது கமர்வோனே
கோலமார் குறமகள் புணர்மார்பா
சூரமா ரசுரரை யடுவோனே
சோலைசூ ழிளசையிற் பெருமாளே.



தன்ன தனன தனதான
தனன தனன தனதான

குமுத பரிமள துவர்வாயாள்
குறவ ரிலம்வளர் வளிமானுள்
விமித தனமகி ழதிலீலா
விகிர்த வுனதிரு கழல்தாராய்
அமுத மொழுகியல் மொழிதாராய்
அகில முணர்தரு மதிதாராய்
கமழு மமுதமு னுகர்வானோர்
கருது மிளசையிற் பெருமாளே.

---

குமுதம் — செவ்வாம்பல். துவர் — பவளம்.

தனனா தனனா தனதானா
தனனா தனனா தனதானா
திருமால் மருகா அருள்தாராய்
சிவனார் குமரா தெருள்தாராய்
செருவா னசுரோர் செறுவோனே
சிவைதா வறுவேல் தருவோனே
கருவான் பொழில்சூழ் பணைமேலோர்
கருவா ரணமார் வளமேலாம்
திருவா ரிளையான் குடிமேலோர்
செயலாற் புகழ்வார் பெருமாளே. 7

---





தனதன தான தன தான
தனதன தான தன தான
பொழுதினை வீணிற் கழியாமல்
புலன்வலி தாகி நலியாமல்
கழுகொடு காகம் கருநாய்கள்
கடுகியென் ஆகம் புசியாமுன்
மழவிடை சூலம் மழுமானும்
மதிநதி சூடி புதல்வானின்
எழுதரு பாதம் தரவேணும்
இளைசையில் வாழும் பெருமாளே 8

---

கரு-பெருமை. வான்-உயர்ந்த, பணை-வயல். கருவாரணம்-சூல்க்கொண்ட சங்கு.

தன தானன தானன தானன
தன தானன தானன தானன
தன தானன தானன தானன தனதான

வரிசேர்சுழல் வேல்விழி மாதர்கள்
புரிதாம்விர கால்மன வாதர்கள்
வரைசேர்தவ மால்கொடு ஆதர்கள் அவமானுர்,
வசையார்தவ மோர்தரு தோதர்கள்
இசையாமதில் சேர்தரு போதர்கள்
வடுவாந்தொழி லேபுரி காதர்கள் பவமானுர்
கரிதேர்பரி கால்பல ஆளர்கள்
நிறைசேர்புவி யாள்பல ராசர்கள்
கனமாந்தொழில் சேர்பர சூரர்கள்-திரைசூழும்
கடன்மீதிலும் ஆணைசெல் வீரர்கள்
திடமாரக மாரக பாரகர்
கணையாலெதிர் யாரையுங் கோறர்கள்—
சவமானு

புரிமாயையி ருளினில் மோசமும்
சரியானத போதனர் நேசமும்
புதிதானம ஞேநிலை வாசமும் - அருள்வாயே
புவிமீதினி லேபுகழ் மேவிட
கவிவாணர்க ளாருற வாயிட
புனிதாவுன தாளிணை சூடிட வருவாயே
கிரிசூரொடு மாகடல் தானவர்
புரிதானவை யாவுமு னேயவர்
கிளையோடுட னேபொடி யாகிட - விடுவேலா

கிளர்மாதவர் போதகர் சூழ்திரு
இளையான்குடி மீதினில் வாழ்தரு
கிருபாகர ஞானமனோகர பெருமாளே. 9

ஆதர்-அறிவிலி. தோதர்—தோதகா-வஞ்சகர். போதா-புத்தியுடையவர் காதா-கொலைபாதகர்.

---

தந்தான தானத் தானந் தான
தந்தான தானத் தானத் தான
தந்ததன தானத் தானத் தன தனதான

செந்திருவு நாவுத் தானத் தாயும்
அந்தமறை யோகத் தானத் தாயும்
செம்பொருளின் ஞானத் தானத் தாயும் அருளிய
செஞ்சொலடி யார்கள் கேள்வித் தாயும்
அஞ்சநிகர் பாக யூகத் தாயும்
செந்தெளிவு ஆக யோகத் தாயும்-முறையாக
அந்தமறை கூவும் போதாத் தாலும்
செம்பதிக மோதும் நாதத்தாலும்
அங்கணர்கள் பேசும் ஞாதத் தாலும்—அடியேனும்
அம்பொனவிர் லோகத் தேவக் கோனும்
செம்பதுமம் வாழும்தேவிக்கோனும்
அஞ்சமிசை யூரும் போதன் றானும் அடைவாக

அந்தணர்கள் சூழும் போதத் தானும்
வெம்பருடல் விழும் வாதத் தானும் குமரேச
வண்டகுடல் கோறும் சூலத்தானும்
அன்டருரை சேரும் கோலத் தானும்
வந்தடியர் கூறும் வேலத்தானும் குமரேச
கொந்தலரில் வீழும் சோலைத்தேனும்
செங்கனியில் வீழும் சாலைத் தேனும்
கும்புடனே சூழும் வாவி பாயும் - இளையான்
கொன்னகரில் வாழும் தீரச் சூர
என்னையுன தாளிற் சேரப்பாரும்
கொன்னவிரும் வாளும் வேலும் நேரும்
பெருமாளே

---

நவிரும் வாளும்-நவிரமாகிய வாளும்.



# வாளவந்தம்மன் தோத்திரம்.

---

க ரற்குந் தாயே தேவி அறுமு கற்குந் தாயே
சங்க ரற்குந் தாயே. தேவி சகல ருக்குந் தாயே
ள வந்தாள் தாயே தேவி வரம ருள்வாய் நீயே
காள நேர்விழி மாயை தேவி கலக்கி டாமனி காவாய்
க வாகன மேறி தேவி சிங்கார மாய்வலம் வருவாய்
தங்க வூசலி லாடி தேவி சகல ருக்கருள் தருவாய்
து நாட்கொலு விருந்து தேவி பதகரைக்கொலை
புரிவாய்
சத்து ரூசம் மாரி தேவி சகலருக்குப காரி
து மூக்குத்தி மின்ன தேவி மோகன மாலைகள் மின்ன
சத்தி தாவட மின்ன தேவி சதங்கை காலணி மின்ன
ந்தமார்வளை மின்ன தேவி அட்டியல் பூடிகள் மின்ன
முத்துக் கங்கண மின்ன தேவிமோ திர பீலிகள்மின்ன
டியாணமு மின்ன தேவி ஓவியக் குப்பிகள் மின்ன
கட்டு மேகலை மின்ன தேவி கா தில் தோடுகள் மின்ன
தி கேடயம் அம்பு தேவி கண்ட கோடரி வில்வாள்
வெற்றி வேல்சமு தாடு தேவி வீர சக்கரம் சூலம்
றி வீரரைக்கொல்ல தேவி இருப்பு லக்கைவல் லீட்டி
பற்றி யாயிரம் சேடி தேவி பரவி யேத்திட நீயும்
றி யாயிர சிம்மம் தேவி சுமந்த ஆசன மேறி
வெற்றி வீரம தாக தேவி வீற்றி ருந்தருள் வாயே
த சூலைகள் பித்தம் தேவி வயற்று நோவுகள்
குட்டம்
சீத பேதிகள் பருவு அறையில் சேரு கட்டிகள் புற்று

காது நோவுகள் குன்மம் வயற்றுக் கடுப்பு நீருக்
கடுப்
மாது தந்திடு நோய்கள் தீய மருந்து யீடுகள்
வெடிப்
காச மாசுகள் சோகை பாண்டு கரப்ப னிருகள்
வெட்டை
நாச பேதிகள் அம்மை நடுக்கம் நரம்புச் சுழுக்கு
கள் மந்த
உச்சி யக்ஷிபல் நோவு யீளை ஊளை பீனிசம் மூலம்
எச்சி பத்துகள் கட்டி புளவை எரிவு களமுறு மாலை
மேக சன்னிபுண் கிரந்தி இருமல் வேறு செய்வலிப்
பாஸ்தம
தாக காச்சலும் கிராணி விக்கல் சலம லத்தின
தடைப்
தோஷ பில்லிகள் வஞ்சம் ஏவல் சூன்ய மாரக மோகம்
மோச பேதன தம்பம் நல்ல முகவ சீகர உச்சம்
பேய்கள் சாத்தாக் காளி மாடன் பிரம ராக்ஷசு வாதி
நோய்கள் வந்துளம் நொந்து உன்னை நோக்கி
நேர்ந்திடு பேண
தீயபாவகம் நீக்கிதாயே சிறந்து வாழுறச் செய்வாய்
காயநேர்மையு மாயுள் தீர்க்கம் கரணநேர்மையு
தருவா
மாவிளக்கொரு வரிசை நல்நெய்மணிவி ளக்கொரு
வரிசை
தூம ணிச்சுடர் வீசும் எண்ணைச் சுடர்வி ளக்கொ
வரிசை

இன்ன வண்ணமங் கெய்திி எல்லாம் இன்னல்
வென்னிட எடுப்பார்

கன்னல் செந்நெலுங் கொண்டு அம்பாள் காலிற்
காணிக்கை சொரிவார்

பட்டுப் பாவாடை தருவார் தாயே பாணகம் பால்
தயிர் தருவார்

வெட்டுப் பலிகளுங் கொடுப்பார் தாயே வீர
பரவசம் நடிப்பார்

எட்டு வயிரவர் சூழத் தேவி எங்கும் நடம்புரி வாயே
அட்ட லக்ஷுமி போற்றத் தேவி ஆனந்த கொலு
விருப்பாயே

பூவின் சிவிகையி லேறித் தேவி பூமி வலம்வரு வாயே
நாவில் வந்தன பாடித் தேவி நானு முன்னடி
சேர்வேன்

குற்ற மொன்றுமென் மீது தாயே குறுகி டாதருள்
புரிவாய்

கற்று நான்தவம் புரியத் தாயே காயம் மனவலி
தருவாய்

காவல் செய்தெனை யாளத் தாயே கருணை செய்தருள்
வாயே

தாவி லிளசையில் வாழும் தாயே தவசி வசுகம்
சரணே



திருச்சிற்றம்பலம்.

